ஓம் தத் ஸத்

தேவார நகரம் சுத்த அத்வைத அருட்கவி,

ஸ்ரீவிலக்ஷணானந்த ஸ்வாமிகள் அருளிச்செய்த

# தமிழ்.



இஃது

தென்குழந்தைமாநகரம்

ஞா. மு. மீ. முத்தையபிள்ளையால்

தூத்துக்குடி:

அருணோதயம் பிரிண்டிங் பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை] 1924 [அணா 2

ஓம். தத். ஸத்.

தேவார நகரம்

சுத்த அத்வைத அருட்கவி

# ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள்

மதுரை மீனாக்ஷி அம்மன் கலியாண

மண்டபத்தில்

உபந்நியாஸம் செய்த

# தமிழ்.

8802 O31

இஃது

உ. கோவிலூர் மடாலயம் KOVILOOR MADALAYAM

[illegible]:

ஞா. மு. மீ. முத்தையபிள்ளையால்

தூத்துக்குடி:
அருணோதயம் பிரிண்டிங் பிரஸில்
பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை] 1924 [அணா 2



ஓம். தத். ஸத்.

ஸ்ரீவிலக்ஷணானந்த ஸ்வாமிகள்

மதுரை மீனாக்ஷி அம்மன் கலியாண மண்டபத்தில்

உபந்நியாஸம் செய்த

# தமிழ்.

---

பாரத நாட்டினர்களே!

தமிழபிமானிகளே!

மதுரைமாநகர் வாசிகளே!

சகோதரர்களே!

இன்று எந்த அருமையான அவசியமான விஷயத்தைப் பேசலாமென்று சுமார் இரண்டாயிரம் தமிழபிமானிகள் மத்தியில் கலியாண மண்டபத்தில் உயர்ந்த மேடையின் மீது ஏறி நிற்கின்றேனென்பது இங்குள்ள எல்லார்க்குந் தெரியாத விஷயமென்று நினைக்க இடமில்லை.

ஆனாலும் தற்சமயம் நான் இங்கு விவரித்துப் பேசவேண்டிய முக்கியமான விஷயம், 'தமிழ் என்ற நமது பாஷையைப்பற்றியே. அதில் நமது இந்தியாவின் தக்ஷிண பாகத்தின் தேசங்களாகிய, சேர, சோழ, பாண்டிய தொண்டை நாடு முதலிய பெரிய பல நாடுகளுக்கும் முக்கிய பாஷையான தமிழ் நாடும் அதன் பிரபல க்ஷேத்திரங்

களும், ஆசார்யர்களும், நமது தமிழ்நாட்டு ஆதி நாகரீகமும், ஆதி உற்பத்தி, தமிழ் வரலாறு தமிழ் தேவன், தமிழ் தலைவன், தமிழ் காலம், தமிழர் ராஜாங்கம், தமிழ் பாஷையின் அருமை, தமிழ் பாஷையின் உயர்வு, தமிழர் பெருமை தமிழுக்குத் தற்போதுள்ள குறைவு, நாம் பேசுகிற தமிழ், பேசவேண்டிய தமிழ் நாம் இனித்தமிழ் விஷயமாகச் செய்யவேண்டிய வேலை, இவ்விஷயங்களைப்பற்றி மிகவிரைவாகவும், தெளிவான பதங்களைப் பிரயோகித்தும், கெம்பீரமான தொனி, முகம், மனம், இவைகளுடனும், தமிழ் பாஷையின் ஆத்திர பக்தியுடனும் திடத்துடனும் கூற ஆரம்பிக்கிறேன். மனதை விஷயங்களிற் செல்லவிடாது ஏகாக்கிரமாக நிறுத்திக்கொண்டு யதார்த்தமாகக் கேட்பீர்களாக.

நமது தமிழ் பாஷையானது ஒரு காலத்தில் ஒருவராலுண்டாக்கப்பட்டதல்ல. மற்றே, பரமசிவன், கைலாச பருவதத்தில் ஆதியில் அவரது இளைய குமாரராகிய முருகக் கடவுளுக்குத் தமிழை உபதேசித்தருளினார். அம்முருகபிரான், பொதிகாசலவாஸப்பிரஹ்ம ரிஷியாகிய அகஸ்தியருக்கு உபதேசித்தருளினார். அகஸ்தியர் பற்பல மஹரிஷிகளுக்கும், அநேக சிஷ்யர்களுக்கும் உபதேசித்தருளினார். அவர்கள் பூமியில் பரவும்படி செய்தனர். அப்பால் விருத்தியாகி பரதகண்டம் பூராவும் எங்கு பார்த்தாலும் தமிழ் மயமாகிவிட்டன. அப்படியே பல பெரிய சித்தர்களாலும், ராஜாக்களாலும், யோகிகளாலும், தமிழ்வகை யாண்டுவரப்பட்டு நெடுங்காலம் அசைபாது நிலைநின்றது இடை இடையே தமிழ் பாஷைக்கு அநேக இடையூறுகள் ஏற்பட்டுப்போன காலத்திலும் திடமாக எதிர்த்துநின்று

யாதொரு தளர்வுமின்றி அநேக இலக்கண இலக்கியப்பிர மாண ஆதாரத்துடனும் ஈஸ்வரப்பிரசாத அனுக்கிரக வடிவ ஆதாரங்கொண்டும், இதுநாள்வரை யாதொரு கெடு தியுமின்றிக் குறைவுமின்றி நிலைபெற்று வந்துகொண்டிருக் கிறது. இத்தமிழை ஆதிமுதல் அதிரகசிய பக்தியுடன் ஆதரித்து வந்தவர் இந்த மதுரைமாநகரத்தை அரசாட்சி செய்துவந்த பாண்டிய அரசர்களாகையால் அத்தகைய இந்நகரத்திலேயே தமிழ் என்ற விஷயத்தைப் பிரசங்கிக் கப் போகிறேன் இந்நகரில் சுமார், பதினாயிரம் வருஷங்க ளுக்கு முன் அரசாண்ட பாண்டிய அரசர்கள் நமது பரம சிவனாலருளப்பட்ட தமிழ்பாஷையை பாரதநாடுமுழுவதும் பரவும்படி செய்ததுந்தவிர, ஐரோப்பா, அமெரிக்கா முத லிய மேல்நாடுகளிலும் பரவச்செய்ததாகத் தெரிகிறது. ரோமாபுரி யென்ற பெரிய பட்டணமாகிய ரொமேனியா வில் பிரபலமான தமிழரசர்களை ஏற்படுத்தி அங்கு அநேக தமிழ்ப் பாடசாலைகள் ஏற்படுத்தி அங்குள்ள பலர் அறிய தமிழ் கற்ற பண்டிதர்களாயிருந்தார்களென்று புறநானூறு என்கிற சங்கநூல் கூறுகிறது. மற்றும் மேல்நாட்டார் கள் நமது இந்த நகரத்திற்கு வந்து பாண்டியர்களுக்கு கப்பம் கட்டி வந்ததாகவும் தெரிகிறது. இவைகளையெல் லாம் பார்க்கும்போதும் பல பிரமாணங்களாலும் தமிழ், எல்லா நாடுகளிலும் பரவியிருந்ததென்று ஏற்படுகிறது தமிழ் அரசர்களிடம் சர்வதேசங்களும் அடங்கியிருந்ததா கவும் தெரிகிறது. ஒவ்வொரு பாஷைகள் ஒவ்வொரு கா லத்தில் பிரபலமாக மங்கிவிடுகிறது. பழைய படியும் மாறி மாறி வந்துகொண்டேயிருக்கும் இந்த நமது தெய்வீகமான தமிழ் பாஷையைக்கொண்டே பற்பல

ரிஷிகள், கோடிக் கணக்கான வேதாந்த சாஸ்திரங்கள், அளவிறந்த வைத்தியசாஸ்திரங்கள்,எண்ணிலாத சோதிஷ கிரந்தங்கள், கணக்கற்ற மதனசாஸ்திரங்கள், நிறையாத மாந்திரீக நூல்கள், அளவுக்கு மிஞ்சிய லௌகிக வைத்திக நூல்கள், எண்ணமுடியாத ஈஸ்வர ஞானபோத சித்தாந்த நூல்கள், நினைத்ததற்கரிய எண்ணுள்ள ஆத்மஞான நூல்கள், பல ரசாயன சாஸ்திரங்கள், பரம ரகசிய ஞானயோக நூல்கள்,ஜட தத்துவ அபாரமான கிரந்தங்கள், பூமிதத்துவ, பிராண தத்துவ, இந்திரிய தத்துவ மனோதத்துவ, விவேக தத்துவ, அஞ்ஞான தத்துவ், விஞ்ஞான தத்துவ ஞான தத்துவ, ஆரூட தத்துவ, சாஸ்திரங்கள், ஆயிரத்திஐநூறு மாதார்தர ஸ்தாபன விரிவான பாஷ்யங்கள் மற்றும் ஆகாயம், நக்ஷத்திரம், சந்திரன், சூரியன், இந்திரன் திரிமூர்த்திகள் விஷய அபார அளவின்றிய மஹத் சாஸ்திரங்கள், அநேக இராஜதந்திர நூல்கள், மந்திர யந்திர பூஜா அனுபவ சாஸ்திரங்கள், யோக சாஸ்திரங்கள் மோனயோக நூல்கள் இத்தகைய அதி அற்புதமான அபார சக்தியுடைய அநேக சாஸ்திரங்கள் நமது அனாதி பாஷையான தமிழில் அருளிச்செதுள்ளார்கள். பின்னும் மேற்கூறிய சாஸ்திரங்கள் நமது பாரத நாட்டுத் தெக்ஷணதேசத்தின் தெய்விகமான சிலக்ஷேத்திரங்களிலும் பல முனீஸ்வரர்களாலும் சித்தாதிகளாலும் சமாதிவைப்பில்வைத்து வெகுபந்தோபஸ்துடனிருக்கிறது. மேற்கூறிய நமது தமிழ் சாஸ்திரங்களை விருத்தி செய்வதற்குத்தகுந்த மேதாவிகள், ராஜாக்கள், அபிமானிகள் இல்லாததால் வெளிக்கு வராமல் மங்கிக்கிடக்கிறது. முற்கூறிய சாஸ்திரங்களிற் பொதிகைமலையின் சார்பான நம்பிமலையின் மேல்பாரிசமுள்ள அம்பலப்பாறை

ச்கு வடக்கேயுள்ள கடாரி என்ற பெரிய பாறையில் புதி னெட்டுச் சித்தர்களால் அருள்செய்த வைத்திய சாஸ்திரங் கள், நாற்பது லக்ஷம் கவிகளுடன் நூற்றிநாற்பத்து நான்கு சாஸ்திரங்கள் பாறைக்குள் தேரையர் என்ற சித்தரால் வைக்கப்பட்டிருக்கிறது. பொதிகையின் ஆண்டிகண்டம் என்ற இடத்தில் எட்டு லக்ஷம் ரசாயன முறைகள் அடங் கிய இருநூறு சாஸ்திரங்கள் மதங்காதி ரிஷிகளால் வைக் கப்பட்டிருக்கிறது. இடும்பன்மலை உச்சியில் யானைப்பாரி என்ற இடத்தில் மதன சாஸ்திரம் நாலாயிரம் கொங்கண ரால் புதைக்கப்பட்டிருக்கிறது. மதுரைக்கு மேற்கேயுள்ள மயிலாடும்பாறையில் வான சாஸ்திரம் பதினேழு லக்ஷம் சாஸ்திரங்கள் புஜண்ட முனிவரால் வைக்கப்பட்டிருக்கி றது. மருத மலையில் மாந்திரீக சாஸ்திரங்கள் எட்டுலக்ஷம் பிண்ணாக்கீசரால் வைத்திருக்கிறது. பிரான் மலையில் கோரக்கரால் சங்கீத சாஸ்திரம் இருபத்தி நாலாயிரம் செப்பேடு செய்து வைக்கப்பட்டிருக்கிறது. கொல்லிமலை தென்மேற்குக் கனிகாரிசம் என்ற பெரிய ஓடையில் பாம் பாட்டிச்சித்தரால் கோடி யோகசாஸ்திரங்கள் வைக்கப் பட்டிருக்கின்றன பச்சை மலையின் கீழ்பாரிசம் பவளக் குன்று என்ற இடத்தில் தந்திர யந்திர சாஸ்திரங்கள் இடைக்காடரால் இருபது லக்ஷம் சாஸ்திரங்கள் புதைக்கப் பட்டிருக்கிறது. மஹேந்திரமலையின் மேற்கே வல்லரக்கன் மதில் என்ற இடத்தில் மனோதத்துவ சாஸ்திரப் பிரிவுகள் எண்பதினாயிரம் ரோமச முனிவரால் புதைக்கப்பட்டிருக் கிறது. அழகர்மலையின் ஆலயத்துக்குள்ளே ஸ்வாமி சன் னிதான பலிபீடத்தின் கீழே வைஷ்ணவாகம சாஸ்திரம் எண்ணாயிரம் யோக ஞான சாஸ்திரம் ஆயிரம், புதைப

டுத்திச் சுந்தரானந்தர் வைத்திருக்கிறார். விசுவாமித்திரர் என்ற மஹரிஷி யென்பவருக்கே பிற்காலத்தில் அகஸ்திய முனிவரால் சுந்தரானந்தர் யென்ற பெயர் கொடுக்கப்பட்டது. தெய்வமலையின் கூபாளிபடுக்கையில் அழுகண்ண முனிவரால் ஆகாயகமன அஷ்டமாசித்திநூல்கள் கணக்கில்லாது பூமியில் வைக்கப்பட்டிருக்கிறது. பொதிகைமலையின் உச்சியிலும் மற்றும் சுற்றிநாலுபக்கங்களிலும் அகஸ்திய முனிவரால் அருளிச்செய்த 40லக்ஷம் யோகநூல்கள், நாலாயிரம் ரசாயன நூல்கள், 2000 வைத்திய சாஸ்திரங்கள், ஆயிரம் மாந்திரிக நூல்கள், 100 வாதநூல்கள், 10000 வேதாந்த சாஸ்திரங்கள், 12000 சோடகலா ஆருதார தத்துவ நூல்கள், 3000 லௌகிக சாஸ்திரங்கள், 400 பாரத நாட்டு பாகியநூல்கள், 8000 சித்தர் நூல்கள், 7000 அவதாரபுருஷ நூல்கள்; 9000 பிராணதத்துவ சாஸ்திரங்கள், 9100 சோதிஷ நூல்கள், சரம், பஞ்சபக்ஷி, கொக்கோகம் முதலியவைகளின் சாஸ்திரங்கள், இரண்டு லக்ஷம், 8000 காயகற்ப நூல்கள், 17000 கருமயோக சாஸ்திரங்கள், நாலாயிர ஆகமநூல்கள், 7000 மந்திர சாஸ்திரங்கள், 3007 மத சாஸ்திரங்கள், 1000 மூலிகாரூட நூல்கள் இவ்வித அபாரமான நூல்கள் பல இடங்களில் சமாதியில் வைக்கப்பட்டிருக்கிறது.

மஹத் சொரூபப் பிரபஞ்ச லக்ஷண சாஸ்திரங்கள் 900000, வராகமலை அரிசிப்பாறையில் குதம்பை முனிவரால் வைக்கப்பட்டிருக்கிறது இன்னும் அதிக சாஸ்திரங்கள் அதிகமாக அனேகமாகப் புதைக்கப்பட்டிருப்பதை இங்கு கூற எனக்கு அபிப்பிராயமில்லை. மேற்கூறிய சாஸ்திரங்கள் பூராவும் தெய்வத்தன்மை பொருந்திய

தமிழ் பாஷையிலேயே மஹரிஷிகளால் வைக்கப்பட்டிருக்கிறது. அதை முறைப்படி சாப நிவிர்த்திசெய்து கண்டுபிடித்து வெளியாக்கக்கூடிய மேதாவிகள் தற்போது கிடையாது. அதற்குத் தகுந்த நமது தமிழ் ராஜாங்க காலமல்லவாயிருக்கிறது. சிற்சில சிற்றரசர்கள் மாத்திரம் தமிழருமை தெரியாமல் அதைக் கைவிட்டு, ஆங்கிலத்திலிறங்கித் தற்போது அதிலும் பூர்ண பாண்டியத்தியமின்றி இரண்டாங்கெட்டபாஷாந்தரர்களாய் துக்கமடைய நான் நேரில் பார்த்திருக்கிறேன். அவர்கள் இன்னாரென்று இவ்விடம் கூறமாட்டேனென்று என் மனம் எண்ணிவிட்டது.

ஆதிகாலமுதல் 1000 வருஷங்களுக்கு முன்வரை நமது பாரதநாட்டு அரசர்கள், பாரதர்களுக்குச் சொந்த பாஷைகளாகிய தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் சிங்களம், மஹாராஷ்டிரம், ஹிந்தி, பங்காளி, ஒரிஸா, ஒட்டிரம், குஜராத்தி, மார்வாடி, கிரந்தம், சமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் திருவாய்மலர்ந்தருளிய சாஸ்திரங்களில் அந்தந்தத் தேச மஹான்கள், பக்தர்கள், ஆசார்யர்கள், யோகிகள், ஞானிகள் முதலியவர்களை அதிபக்தி வினயத்துடன் ஆதரித்து அதற்குவேண்டிய உபகாரமியற்றி நமது நாட்டு ஜனங்களுக்கு வெளிப்படுத்தி பக்தி, ஞானம், யோகம் கருமம் சுவதந்தரியம் முதலியவைகளை வெளிப்படுத்தி ஈஸ்வர வுயர்வு, ஜன்ம மரண லக்ஷணம், சரீர தோற்றம், கடவுளை அறியவேண்டிய வழி மன இந்திரிய பிராண அடக்கம், உட்புற ஆசாரம், ஆகாய கமனசக்தி, தைரியம் இவைகளை அரசர்கள் ஜனங்களுக்கு உண்டாகும்படி செய்து அதற்குவேண்டிய இடம், பொருள், ஏவல் மூன்றையும்

8802
031



இயற்றி நன்மையின்றித் தீமையென்பது அற்பங்கூட இல்லாமல் நமது நாட்டு ஜனங்களைப் பல விஷயங்களாலும் சீர்திருத்தி யாதொரு இடையூறுகளும் யாருக்குந் தோன்றாமல் சமரச சுபாவத்துடன் பற்றின்றி சந்யாஸிகளைப் போல் அரசர்கள் நம் நாட்டை ஆண்டுவந்தார்கள். இதற்குப் பிரமாணமாக ஸ்ரீராமர், நளன், மாந்தாதா, சிபி, சகரன், யயாதி, புரூருவன், பகீரதன், மனு, இக்ஷுவாகு முதலிய ஆதிகால ராஜாக்கள் பரிக்ஷித்து, விக்கிரமார்க்கன், அசோகன், போஜன் முதலிய அரசர்கள் காலத்திலும் நமது நாட்டை, பக்தி, கருமம், ஜீவகாருண்யம், முதலியவைகள் விருத்தியடைவதற்கென்றே ஒரு டிபார்ட்மெண்டு ஏற்படுத்தி அதற்குத் தகுந்த பல பெரிய மஹான்கள் மூலமாக நமது நாடு முழுவதும் பாபமென்பது சிறிதுமில்லாமல் புண்ணியமே மிகுந்து, சாஸ்திர மார்க்க பக்தி அனுபவம் உண்மை, ஞான அனுபவமான மார்க்கத்தில் செல்பவர்களான ஜனங்களாகவே இருந்தார்கள். குடிகள் அரசர்களாலும், தெய்வம், தேவர், மிருகம், வியாதி, அக்கினி முதலியவைகளால் யாதொரு இடையூறுமின்றிச் சதா பகவத்தியான நாட்டமாயிருந்தார்கள். அக்காலத்தில் அற்பாயுளோடு கூடிய மனிதர்கள் கிடையாது. மனதிலும், வெளியிலும் மோசங் கிடைக்காது. உத்தமமான பதிவிரதா ஸ்திரீகள் உயர்ந்த புருஷர்கள், ஆசையற்றவர்களாகவே இருந்தார்கள். 500 வருஷ காலமாக நமது நாட்டில், மதம், தேசம், ஆசாரம், நடக்கை, உணவு, பேச்சு, உடை, நினைப்பு, சேர்க்கை, அந்தஸ்து, சாஸ்திரம், சரீர பலம், தேஜஸ், இவைகள் அடியோடு மாறிவிட்டன. ஆதிகாலத்தில் நமது சுதேச அரசர்கள் நமக்குச்

செய்திருக்கும் நன்மைகளைப் போல தற்காலத்திலும் நமது கவர்ண்மெண்டாரவர்கள் பல பெரிய பட்டணங்களி லும், சிற்றூர்களிலும், பல படிப்புச்சாலைகள் ஏற்படுத்தி அதில் கல்வி பயில்கின்ற பால்யர்களுக்கு ஆரம்பத்திலேயே மஹான்கள் சரித்திரம், ஹிந்துமத விஷயமான கல்வி இவை களைப் போதிக்காமல் அயர்லாந்தில் ஒரு ஸ்திரீ இருந்தாள் அவள் பெரிய வயதாகிய யவ்வனம் வந்தவுடன் அழகாக தன் சரீரத்தைப் பல ஆடை ஆபரணங்களால் அலங்கரித் துக்கொண்டு வீதி வழியாய்ச் சென்று பல புருஷர்களை மயக்கிவிடுவாள். அப்படியான அந்த மாதரசை ஸ்காட் லாந்திலுள்ள ஓர் பெரிய லார்டு துரையவர் சென்று அவளை விவாஹஞ்செய்துகொண்டு வந்து விட்டனர். சில தினஞ் சென்ற பின், ஓர் நாள், துரையும், அம்மாளும், :நிர்வாணி களாகிக் குடிவெறியால் மிருகம்போல வரன்முறையின்றி மயங்கிக்கிடக்கும் நேரம் மற்றோர் பலவானான லார்டுவந்து இந்த துரையைக் குத்திக்கொன்றுவிட்டு, அந்தப்பெண்ணை தனது இருப்பிடத்திற்குக் கொண்டுபோய்விட்டான். பல தினஞ்சென்று அவள் மற்றொருவனைக்கூட இச்சைகொ ண்டு இந்த லார்டுவைத் துப்பாக்கியால் சுட்டுவிட்டாள். என்ன ஆச்சரியம், என்ன தீரம், பார்த்தீர்களா என்று இவ்விதமான கல்வியைப் போதிக்கிறார்கள். இதைக்காட் டிலும் முட்டாள் படிப்பு உலகத்திலிருக்காதென்றே நினைக் கின்றேன், அதிபால்யர்களுக்கு ஆரம்பித்தவுடனே புண் ணியமான விஷயங்களைப் போதிக்காமல் இப்படிப் படித்த வுடன் நாமும் பெரியவனான பின் ஒரு ஸ்திரியை மோச மாய்க் கூட்டிப்போய் விடுவோமென்று நிச்சயித்து விடுகி றான். இதனாலேயே சிறுபையன்களுக்கு மனந்தடுமாறிப்

பிராணன் சிதறிச் சரீரம் பலங் குறைந்து, பேச்சுமையந்தி கன்னம்வற்றி, இன்சால்மெண்டுப் பேர்வழிகளாய் குரங்கு போல் கிராப்புடன் சேர்த்துவிடுகிறது தற்போது நமது ஜனங்கள் உலக ஆசையை வெறுத்து, மனதடங்கி, மோக்ஷமடைவதற்கு வேண்டிப்பல கிராமங்களிலும், பட்டணங்களிலும், கள்ளுக்கடை, சாருயக்கடை, கசாப்புக்கடை, பிராந்திஷாப் முதலியன ஏற்படுத்தித் தண்டுரா மூலமாகப் பருகச்செய்து நிஷ்டை கூடி ஆத்மபோகத்தை அடையச் செய்கிருர்கள். ரெவர்ஷ்மெண்டு ஹால் சாப்பாட்டின் மார்க்கமாய்ப் பலர்கள் பூட்ஸ், கிராப்பு, முதலிய பிரபல ஞானத்தை அடைந்துவிட்டார்கள்.

சாதாரணமாக மனிதனுக்கே புத்தி தடுமாறி மயக்கத்தோடு கூடியதாயிருக்க, அத்துடன், கள், சாருயம், அபின் கஞ்சா, பிராந்தி ஒஸ்கி, மாமிசம் இவைகள் தின்ருல் மயக்கத்திற்கும் முழு மூடத்தனத்திற்கும் கேட்கவா வேண்டும் மேற்கூறிய இவ்வித லாகிரி ப்தார்த்தங்களைத் தின்றவுடன் காமவெறிகொண்டு மனது வரன்முறையின்றிக்கண்ட ஸ்திரீகளின் மீது கண்ணேட்டம் படுகிறது. அதில் நல்ல உத்தமமான பதிவிரதைகள் என்று பயப்படாமல் கற்பளிக்கத்துணிந்து விடுகிருர்கள். ஆதிகால அவதார புருஷர்களாகிய, ஸ்ரீ கிருஷ்ண பகவான், சங்கராச்சாரியார், ராமனுஜாச்சாரியார், மத்துவாச்சாரியார் என்ற பெரிய மஹான்கள், மேற்கூறிய லாகிரி பதார்த்தங்கள், அன்னிய ஸ்திரீகளின் சேர்க்கை, மனந்தடுமாறல், மூடத்தனம், இவைகளுக்கு ஆதாரமாகி பாபத்திற்கு ஆளாக்கிவிடுகிறது. தற்கால ரெவர்ஷ்மெண்டு அவதார புருஷர்கள், முன் கூறிய அவதார புருஷர்களைக்காட்டிலும், தாங்

கள், ஞானத்திற்கு வேண்டிய ரகஸ்யங்களைக் கண்டுபிடித்துவிட்டோமென்று, தன்னிடம் வருகிற சிஷ்யர்களுக்கு மோக்ஷ சாதனமான், லாகிரி பதார்த்தங்கள், மாம்சவுணவு பரஸ்திரீகள் புணர்ச்சி முதலியன செய்கிறார்கள், தற்காலம் யதார்த்தமான பதிவிரதா ஸ்திரீகள், பதிவிரதா புருஷர்கள், கெட்ட நினைப்பில்லாத மனிதர்கள் கிடைப்பது அதி துர்லபம். மேல் நாட்டாரது அநாகரீகச் செயல்களைக் கண்ட நமது இந்தியர்களில் சிலர் அதில் மயங்கிச் சிஷ்யர்களாகிவிட்டார்கள்.

மேல் நாட்டார்களில் சிலர் நமது இந்தியா தேசத்திற்கு 400-வருஷங்களுக்கு முன் வந்து இங்குள்ள நான்கு முக்கியமான பதார்த்தங்களைக் கொண்டுபோய்விட்டார்கள். ஞான சாஸ்திரம், ரசாயன சாஸ்திரம், பூகோள சாஸ்திரம், ஜடதத்துவ சாஸ்திரம். இப்படி அவர்கள் கொண்டுபோன விஷயந் தெரிந்த இந்தியர்களிற் சிலர் பொறுமைகொண்டு நாமும் திரும்ப மேல்நாடு சென்று பதிலாக நான்கு கொண்டுவேர்துவிடலாமென்று மேல் நாடு சென்று அதி தீவிரமாக இதுவரை ஒருவரும் இந்தியாவில் கண்டுபிடிக்கமுடியாத கிராப், ஒஸ்கி, பிராந்தி, பூட்ஸ் இந்த நான்கையும் கொண்டுவந்துவிட்டார்கள். இவ்வார்த்தையைக்கேட்க இந்தியர்களாகிய உங்களுக்கு, வெட்கமும் அவமானமும், கோபச் சிரிப்பும் உண்டாகாதிருக்குமா. நமது பாரத நாடு இழந்த நேர்மையென்ன. பக்தி, ஞானம், ஒழுக்கம், திடம், தேஜஸ், அந்தஸ்து, புகழ், உணர்ச்சி, உறுதி, நம்பிக்கை, தெய்வ பக்தி, தேவாலயம், பிர்மாலயம்,மடம், தடம் முதலியவைகளால் சூழப்பட்டு, அபார அந்தஸ்தோடு கூடியிருந்தது, இப்போது மேற்கூறியன

முழுதும் விடுபட்டு வெளிவேஷ டம்பமாத்திரமாகியதும் துர் நடத்தைகளுக்கு ஏதுவானதாகியும் இருக்கப்பட்ட மோட்டார், ரெயில், மாம்சம் லாகிரிகள், ட்ராமா முதலியன நிறைந்துவிட்டது, இதையெல்லாம் பார்த்து ஆலோசிக்கும்பொழுது ஒருவரையுங் குற்றங்கூற இடமில்லை இன்னின்ன காலங்களில் இன்னின்னபடி நடக்கவேண்டியதென்கிற ஈஸ்வரனது நியதிப்படி நடக்கிறது. இன்னும் இதைத்தவிர, நமது தமிழ்நாட்டுச் சமரச அபிப்பிராயத்தைச் சற்று ஆராய்வோம் நமது தமிழ்நாட்டுக்கு இப்போது இராஜதானியாய் இருக்கக்கூடிய சென்னைமா நகரிலுள்ள ஓர் பாகமாகிய திருவல்லிக் கேணியில் ஜட்ஜ் சதாசிவ அய்யர் பேசியபொழுது நமது இந்தியாவிற்கு இன்னும் சமரசம் வரவில்லை, தற்காலமட்டும் கொஞ்சம் வந்திருப்பதாகத் தெரிகிறது. இன்னும் ஐந்து வருஷ காலம் பார்ப்பேன், அதற்குள் இந்தியா முழுதும் பிராமணர்முதல் நீசர்வரை ஒன்றாக மேஜையில்சாப்பிட்டு, சம்மந்தமும் செய்து, சமரசத்திற்கு வரவில்லையானால், நான் ஹிந்துவல்லவென்று கூறிவிடுவேனென்று கூறியிருப்பதாகபேப்பரில்பார்த்தேன் இந்த சதாசிவய்யர் ஹிந்துவல்லவென்று சொல்லிவிட்டால் நமதுஹிந்துமதம் முழுகிப்போய்விடுமோ? ஹிந்தியாவே இல்லாமற்போய்விடுமோ, அல்லது அய்யர் நமக்கு ஆசாரியஅவதார புருஷரா, அல்லது பெரிய ஞானியா, அதுவுமின்றி பற்றற்று விளங்குகிற காந்திபோன்றவரா, அல்ல அல்ல பின்னும் நமது ஹிந்துமத விஷயம் பூராவாகத் தெரிந்தவரா, ஒருவரும் இதற்குச் சம்மதப்படமாட்டார்கள். ஆத்துமாவினின்று ததும்பிச் சமரசம் கீழிறங்கி, மனதில் வழிந்து, சரீரம், உலகம், வாக்கு, நடை, உடை இவைக

KOVILOOR MADALAYAM

னிற் கலந்து, இதுநாள்வரை இந்தியாவில் வந்துகொண்டி ருந்தது. தற்போதுள்ள அய்யரவாள் சமரசம் ஒரே மே ஜைச் சாப்பாடு, எல்லா ஜாதியாரும் புணர்ச்சிப்பது என் கிருர்கள், மேற்கூறியபடி சமரசம் அநேக ஆண்டுகளா கப் பழகிவந்த மேல்நாட்டார்களுக்கு மனதிலும், வெளியி லும், சமரசம் வந்ததாகத் தெரியவில்லையே. மேல்நாடு களில் ஒருவனுக்கொருவன் குத்திக் கொல்வது, அரசனை குடிகள் சுடுவது, இவ்விதமான செய்கைகளே கூடியகா லத்தில் நடந்திருக்கிறது. அந்தச் சமரசத்தையா இந்தி யாவில் பரவச்செய்வது. இவர்களது அஞ்ஞான ஆசை இப்படிச் சமரசத்திற்கொண்டுபோய்விட்டுவிட்டது ஸ்ரீரா மர், கிருஷ்ணர், அர்ஜுனன், சங்கரர், மத்வர், ராமானுஜர் இவர்களுக்கு அய்யரவாள் சமரசம் வரவில்லையோ, அவர் களும் வந்து இவாளிடம் பழகவேண்டியதுதானே, வியா ஸர் வசிஷ்டர், பராசரர், மரீசி, அத்திரி, சுகர் மாண்டவ யர், திருதுலர், ஜமதக்னி, மனுமாந்தாதா, தத்தாத்திரே யர், கௌடபாதர், கண்ணன், ஸ்ரீராமன், ஹனுமார், பீஷ் மர் முதலிய மேதாவிகள் வருணாச்சிரம தருமங்கள் ஞா னத்திற்கேதுவென்று ஏற்படுத்தியதாகத்தெரிகிறது, அவர் கூறிய வருணாச்சிரம தருமமே ஞான சாதனமென்று கூற அய்யரவாள், இது கூடாது, எல்லாம் விட்டுச் சமரசம் வந்தால்தான் க்ஷேமம் உண்டாகுமென்கிருர்கள். மேற் கூறியவர்களைக் காட்டிலும் அய்யர் எந்த விஷயத்தில் மேன்மையுடையவரோ தெரியவில்லை. பணத்திலா, அந் தஸ்திலா, அழகிலா, பலத்திலா, சுவாதந்தர்யத்திலா, பேச் சிலா, நினைப்பிலா, படிப்பிலா, ஞானத்திலா, ஒரு விஷயத் திலுமில்லை. இவ்வகைச் சமரசத்தால் நம் நாடு கெட்டுப்

போயிருக்க, இன்னும் இச் சமரசம் நம் நாட்டார்களுக்கு வேண்டியதில்லை. உண்மை ஞானம் வந்து சமரசம் வர வேண்டியதிருக்கப் புஸ்தகப் படிப்புச் சமரசம் நிலைநிற்குமோ? இந்தவிதமான சமரச அகண்டாகார ஞானத்தினல்தான் நமது ஹிந்துமதத்தை நிலைநிறுத்த வந்த அவதார புருஷராகிய அருண்டேல் துரையவர்கள் பிராமண ஸ்திரீயை விவாஹஞ்செய்யத் துணிந்திருப்பாரோ, பெரிய மஹான்கள் அனுஷ்டித்துக் காண்பித்தால்தான் பல பாமர ஜனங்களும் செய்து ஞான நிலையை அடைவார்கள் என்று கீதையில் பகவான் சொல்லியபடி அருண்டேல் அவதார புருஷர், இந்தியாவிற்குச் சமரசம் போதிக்க வெண்ணி நாமே அனுஷ்டித்துக் காண்பித்துவிடுவோமென்று நிச்சயித்துப் பிராமண ஸ்திரீயை விவாஹஞ் செய்யத் துணிந்தாரென்றே நினைக்கிறேன். நேரே சென்று மேற்கூறியவர்களைக் கேட்கலாமென்றாலோ, ஆதிகால பாரதநாட்டு நாகரீகத்தை நழுவவிட்ட தற்கால மேல்நாட்டு நாகரீக சமரசத்தைக் கொண்டவர்களோடு பேச இஷ்டமில்லை அப்படியே பேசி என்ன பிரயோஜனம். என் மனதை அவர்கள் திருப்பிவிடமுடியுமா அல்லது அவர்கள் மனதை நான்தான் திருப்பிவிடமுடியுமா? இரண்டுமில்லை. அவரவர்கள் பூர்வ கர்ம சம்பந்தப்படி அவர்கள் செல்லட்டும். இதைத்தவிர நமது இந்தியாவில் ஆதிகாலமுதல் தற்காலம்வரை இராம கிருஷ்ணாதி அவதார புருஷர்களாலும் திருமதஸ்தாபன புருஷர்களாலும் ஸ்தாபிக்கப்பட்ட பல சபைகள் ஏற்படுத்திக் கடவுளை அடைவதற்குவேண்டிய இடம், சக்தி, குரு மடம் தடம், பாஷ்யம் இவைகள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள் அப்படியே உலகமுள்ளவரை

அபிப்பிராய மெய்யான அருளால் நிலைக்கவேண்டியபடியு மிருக்கிறது தற்போதும் ஸ்ரீராமன் சபை, கண்ணன் சபை சங்கரர் அத்வைத சபை, ராமானுஜர் விசிஷ்டாத்வைத சபை, மத்வர் துவைத சபை, திருஞான சம்பந்தர் சைவ சபை, திருநீலகண்ட சிவாசாரியார், அப்பய்யர் தீக்ஷதர், வேதாந்த தேசிகர், வித்தியாரண்யர் முதலியவர்கள் மௌன ஞானசபை இவைகள் தற்போது ஆசார்ய பீடங்களுடன் தயாராயிருக்கின்றன. இவற்றை விட்டு விட்டுப் புதிதான தியாசாபிகல் சபையில் நமது இந்துமத ஸ்தாபனராகிய மேற்கூறியுவர்கள் சபையைக் காட்டிலும் எந்த விஷயத்தில் இந்த நூதன சபை ஏற்பட்டதோவென்றால் யில் ஒரு விஷயத்திலுமில்லை. சித்தி, முத்தி, பத்தி, சத்தி, கல்வி முதலிய ஒரு விஷயத்திலும் மேற்பட்டதாகத் தெரியவில்லை. வைதிக சம்பந்தமான ஆதிகால நமது சபையைக் காட்டிலும், இந்தச் சபை, எந்தச் சபை எந்த விஷயத்தில் உயர்ந்ததென்று இந்திய நூதன புத்திசாலிகள் சேர்ந்தார்களோ தெரியவில்லை. அப்படிநம் ஆதி சபைகளைக் காட்டிலும் ஏதாவது மேற்பட்டதாக யாராவது எனக்குக் காட்டுவார்களானால் உடனே நான் நூதன சபைக்கு வந்துவிடுகிறேன்.

ஆர்யர்களே!

இது இப்படியிருக்க, இனித் தமிழ்ப் பாஷையின் பெருமையைப்பற்றிக் கூற ஆரம்பிக்கிறேன். நமது தெய்வீக தன்மை பொருந்திய தமிழ்ப் பாஷையிலேயே அகஸ்தியர், அகத்தியம், பஞ்சகாவியம் என்ற தமிழ் நூலும், சைவ சமயாசாரியார் நால்வர்களும் அடங்கன் முறை, திருவாசகம் முதலிய தமிழ் வேதமும், பனிரெண்டு ஆழ்வாராதி

யர்கள், நாலாயிரந் திவ்யப் பிரபந்தமும், சிவப் பிரகாச
ஸ்வாமிகள், பிரபுலிங்க லீலையும், பட்டினத்தடிகள், தாயு
மானவர். தமது அனுபவ நூற்களும், தத்துவராயர் பிர
ஹமனுதி பெற்ற பாடுதுறையென்ற நூலும், மற்றும் அபா
ரமான பல பெரிய மஹான்களாலும், அபரிதமான அருட்
பாக்களும் அருளிச்செய்திருப்பது தற்போதும் காணலாம்
இந்தியாவின் யதார்த்த ஞானிகளுக்கு என்ன அடையாள
மென்றால், துப்பாக்கிக் குண்டு மேல்படக்கூடாது. ஆகா
ரமின்றிப் பல வருஷங்கள் இருந்துவிடவேண்டும். அக்
கினி சுடக்கூடாது, மிருகங்கள் சகோதரர்போல் ஆகிவிட
வேண்டும் சரீரத்தைத் துண்டு துண்டாக வெட்டினாலும்,
மனதிற்குத் துக்கம் தெரியப்படாது, இவ்விதமாக நான்
சொன்ன வார்த்தையென்று நினைக்கப்படாதீர்கள். வசிஷ்
டர் ஸ்ரீ ராமபிரானுக்கு உபதேசித்த ஞானவாசிஷ்ட கிரந்
தத்தில் முமுக்ஷுப் பிரகரணத்திலும், ஸ்ரீ கிருஷ்ண பர
மாத்மா, அர்ஜுனனுக்கு உபதேசித்தருளிய ஸ்ரீ பகவத்
கீதையென்ற மஹத் சுருதி ஆருவது அத்தியாயத்திலும்
சொல்லப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட சக்திவாய்ந்த
வாகளல்லவோ சமரசங் கண்டவர்கள். தாயுமானவர்
என்ற ஓர் மஹத்து கூறுகிற பாடலில் வேதாந்தம், சித்
தாந்தம், என்ற இரண்டையுந் தாண்டிய இடத்தில்தான்
சமரசம் வந்து சேருமெனக் கூறப்பட்டிருக்கிறது. சம
ரசமென்பது வேதாந்த சித்தாந்த சூரியப் பிரவாகமுங்
கடந்த இடத்தில் விளங்குமென்று மஹான்கள்கூறியிருக்க
அய்யரவா மேஜைச் சாப்பாட்டிலும், மோட்டாரிலும்,
முதல் வண்டியிலும், கண்ட ஸ்திரிகளை விவாகம் செய்வதி
லும் சமரசம் விளங்குகிறது இவ்வார்த்தை அற்ப அறி
வுடையவன்கூட ஒப்புக்கொள்ளமாட்டானே. இவ்விஷ
யம் இத்துடன் நிறுத்திவிடுகிறேன். ஏனெனில் விஷய
மில்லாத காரியத்தைப்பற்றி ஏன் நான் பேசவேண்டும்.
அதனால் நமக்கும் பாபம் சம்பவித்துவிடும்.

அன்பர்களே!

நாம் எப்போதும் நமது மஹத் பாஷையாகிய தமி

ழையே எப்போதும் பேசவேண்டும். மற்ற அன்னியதேச பாஷையாகியும் ஆத்மஞான சாதனமில்லாததாயும், பூர்ணமில்லாததாயும், வேதாந்த பதங்களை உபயோகிப்பதற்குப் பதமின்றியதாயும் இருக்கப்பட்ட இங்கிலீஷ் பாஷையை நமது குக்ஷி பாதை நிவர்த்திக்காக கோர்ட்டில் மட்டும் பேசவேண்டும் இங்கிலீஷில் பாபம் என்னும் பதத்திற்கு வின் என்ற பிரதி பதமிருக்கிறது. புண்ணியம் என்பதற்குப் பதம் உண்டானால் பெரிய ஆங்கில பண்டிதர்கள் சொல்லட்டும் பார்ப்போம். புண்ணியம் என்னும் பதத்திற்குப் பிரதிபதம் ஆங்கிலத்தில் இல்லை. எப்போது புண்ணியத்திற்குப் பிரதிபதம் இங்கிலீஷிலில்லையோ, அந்தப்பாஷை புண்ணிய பாஷையல்ல மதம், தேசம், படிப்பு, உணவு, முதலியன யாவும் புண்ணியமுடையன அல்ல. அந்த ஆங்கிலேயர்களுக்கும், புண்ணியமில்லையென்று தெரிகிறது. அப்படிப்பட்டவர்களுடைய சமரசத்தையா நாம் பழகுவது நாம் கவர்ண்மெண்டு சம்பந்தமாகமாத்திரம் ஆங்கிலேய பாஷையை உபயோகிக்கவேண்டும். இதை விட்டுப் பெண்சாதியிடத்திலும், ஹோட்டலிலும், சாப்பிடும்போதும், பந்துக்களிடம் பேசும்போதும். தூங்கும்போது பிதற்றுகின்ற சொற்பனத்திலும், ஆலயங்களிலும், மடங்களிலும், சந்நியாசிகளிடத்திலும், பெரிய மஹான்களிடத்திலுமா ஆங்கிலத்தை உபயோகிப்பது மேற்கூறிய இடங்களில், நமதுசொந்த பாஷையாகியும், சோமசுந்தரப் பெருமானுக்கு உகந்ததாயும், இராநின்ற தமிழையே பேசவேண்டும். இதைவிட்டு அன்னிய ஆங்கில பாஷையையே பேசினால் நமது சொந்தப் பாஷையாகிய தமிழ் என்பதையே பேசத் தெரியாமல் பாஷா நாஸ்திகர்களாய்விடுகிறார்கள் ஆகிவிட்டார்கள். தற்போது அநேக பிராமணர் உத்தியோகத்திலிருப்பவர்கள் தமிழ்ப் பேசத் தெரியாமல் விழிக்கிறார்கள் வயிற்றுச் சோத்துக்காக அறை குறையாக ஆங்கிலங் கற்று அதிலும் ஸ்திரமின்றித் தமிழையு மறந்து இருபக்கத் துறவிகளானார்கள். அந்தோ பரிதாபம்! இக்குறை எக்காலம் எந்தப் பரம புருஷனால் நிவர்த்தியாகுமோ தெரியவில்லை. ஆதலால் நாம் நாள்தோ

னும் நமது தமிழ் பாஷையின் அதி தேவதையாகிய பரம சிவனிடம் இக்குறையைக் கூறி வருவோமானால், அருள் புரிவது நிச்சயம். முன் சுமார் 20-வருஷங்களுக்கு முன் இருந்த இங்கிலீஷ் மயக்கம் இப்போது பல இந்தியர்களுக் கில்லை. வர வர அப்பாஷையில் ஸ்திர புத்தி குறையக் குறைய தமிழுக்கு மதிப்பு ஏற்படுகிறது ஏதாவது ஒரு பாஷையிலாவது பூர்ண பாண்டித்தியம் இருக்கவேண்டும் நமது தேசப்பிராமணர்களில் வைஷ்ணவர்கள் தமது பிதா மாதா முதலியவர்கள் சரீரம் இறந்துவிடுமானால், யாரா வது கேட்டால் என் மாதா பரம பதத்துப் போய்விட்டா ரென்றும், வடமாள் ஸ்மார்த்தர்கள் ஈஸ்வரப் பிரசாதத் அடைந்துவிட்டார்கள் என்ற பழைய வார்த்தைகளை ஆங் கிலங் கற்றதினால் மறந்து, எனது மாதா, பிதா டைட் ஆய்விட்டார்கள் என்கிறார்கள். நமது நாடு இப்படியும் போகுமா, ஆங்கிலங் கற்ற இந்தியத் துரையவர்கள் ஆலயத்துக்கு ஸ்வாமி தரிசனஞ் செய்யப்போகிறதில்லை. அப்படியே யாராவது சிபார்சு செய்து நீ வந்து ஸ்வாமிதரி சனஞ் செய்யாதுபோனால் ஈஸ்வரன் எப்படிப் பிழைப்பார் என்று வற்புறுத்தி அழைத்தால் ஆலயத்துள் நுழைந்து அர்ச்சகரை அழைத்து, ஸார், வாட்ஸார் என்று பேசத் தெரிந்துவிட்டார்கள் இதைக் காட்டிலும் அற்பமுடைய தனம் உண்டா. வால்மீகர், புஜண்டர், அகஸ்தியர், கொங் கணர், கோரக்கர், ரோமசர் முதலியரிஷிகள் முதலில் தமி ழைக் கற்றுத் தேர்ந்தபின் சமஸ்கிருதம் படித்ததாகத் தெரிகிறது. தமிழைப்பற்றிப் பேசுவதென்றால், கோடிக் கணக்கான காலம் பேசிக்கொண்டேயிருக்கலாம். தமிழ்ப் பாஷையின் முடிவை அறியவேண்டுமாயின் பரமசிவனை அறிந்தால்தான் முடியும். பரமசிவனை அறிந்தவன்தான் தமிழை அறிந்தவனாகும். சுப்பிரமணியமூர்த்தி, திருஞா னசம்பந்தமூர்த்தியாகத் திருவவதாரஞ் செய்து, தமிழி லேயே பல க்ஷேத்திரங்கள்தோறும் சென்று அளவற்ற தமிழ்ப் பதிகங்கள் பாடியிருக்கிறார்கள். முருகக் கடவு ளுடைய அவதாரமாகிய திருஞானசம்பந்த ஸ்வாமிகளுக் குச் சமஸ்கிருதம் தெரியாதா. ஏன் தமிழில் பாடவேண்

டும் என்றால் அதன் ரகசியத்தைத் தற்போது இங்கு பிரசங்கவாயிலாகக் கூறத் துணியவில்லை தெரியவேண்டுமானால், சிதம்பரம், பொன்னம்பலம் பிள்ளை திருச்சிற்றம்பல ஷாப்பிலும், ஸ்ரீகாசி அகண்டாகார ஷாப்பிலும், ஸ்ரீரெங்கம் ரெங்கராஜ ஷாப்புகளிலும், திருமலை வெங்கடேஸ்வர நிதி கடையிலும், சென்று கேட்டுக்கொள்ளலாம். இப்படியே தமிழ்ப் பெருமையையும், அருமையையும், சூக்ஷமத்தையும், பேசப்பேச விரிந்துகொண்டே போகுமானதால், திராவிடாபிமானிகளே!

நமது தமிழ்ப் பாஷையின் அதி தேவதையாகிய, சோமசுந்திர, மீனாக்ஷிசமேத சுப்ரமண்ய, விநாயக, நந்தீஸ்வர, சமஸ்கார பிருங்கி, பதஞ்சலி, வியாக்கிரபாத, சங்கிரக, சிவகண, சிவபக்த, சிவாம்ச, பாம அடியார்கள் சமாஹித, சம்பிரம, கோலாகல, அப்ரமேய, அவாங்கரணவகோசர, அவ்யக்த, அகுணாதீத, அசல, கைலாசவாசக்தி நிர்க்குணமய வடிவமான ஏதொரு தெய்வ சக்தியுண்டோ அதன் அருள் பிரசாத வல்லமையால் இந்தத் தமிழ் என்ற இந்த நூலை சங்கிரகமாக முடிக்கப்பட்டிருக்கிறது.

கோவிலூர் மடாலயம் KOVILOOR MADALAYAM

இந்தப் புஸ்தகத்தில் ஆதிமுதல் அந்தம்வரையுள்ள, விஷயங்களில் எவ்வூராரேனும், எச்சாதியாரேனும், எம்மதத்தாரேனும், எப்படியேனும், எங்கேனும், இசைந்தேனும், இசையாதேனும், கேள்விகேள்கவிரும்புவர்கள் நேரே மேற்கண்ட விலாசத்தாரிடம் வந்துகேட்க இந்தச் சட்டம் இடங்கொடுக்கிறது சாஞுதபிதற்றுவது பிசகு. நேரே பேசுவதுதான் புத்திசாலிகளுக்கு அழகாகுமென நம்புகிறேன்.

ஓம் தத் ஸத்.

வலக்ஷணானந்த ஸ்வாமி,

ஆடுதுறை, திருச்சிராப்பள்ளி,

மதுரை, கொல்லங்கோடு.

# விளம்பரம்.



ஆத்ம சம்ரட்சிணியின் பத்திராசிரியராகவிருந்த

சாத்தூர்

S. A. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய

## கமலவேணி.



இது ஒரு அருமையான தமிழ் நாவல். இருபாலரும் வாசித்து ஆனந்திக்கத்தக்கது. இதில் இலஞ்சம் வாங்கிய சப்மாஜிஸ்திரேட்டு அடைந்த கதி, இலஞ்சம் வாங்காத அதிகாரி அடைந்த மேன்மை, செட்டான செலவுகளினால் வரும் நன்மைகள், டாம்பீகச் செலவுகளினால் வரும் கேடுகள், செஷன்கோர்ட்டு விசாரணை முதலியவை அடங்கியுள.

(104) பக்கங்களுளது ... ... விலை அணா 0-10-0

**திருமூலர் திருமந்திரம் 3000 பாட்டுகளடங்கியது.**

478 பக்கம் கிளேஸ் காகிதத்தில் காலிகோ பயிண்டு செய்தது. புஸ்தகம் 1-க்கு ரூ. 1-8-0 புள்ளதை நமது அச்சாபீஸ் பிரபலமாகும்பொருட்டு ரூ. 1-க்கு கொடுக்கப்படும்.

**நற்புத்தி புகட்டக்கூடிய உலக விசித்திரக்கதை.**

ராயல் 10 பக்கங்களடங்கிய நயம் சுத்தப்பதிப்பு புஸ்தகம் 1க்கு விலை அணா 4.

கிடைக்குமிடம்.

அருணோதயம் பிரிண்டிங் பிரஸ், தெற்கு ராஜ தெரு, தூத்துக்குடி.